5th September 1960]

THE HON. SRI R. VENKATARAMAN : Credit to the extent of 10 million dollars has been made available by the Development Loan Fund to the National Small Industries Corporation, Limited, New Delhi, which is a company started by the Government of India. The Corporation has decided to utilize the credit for the operation of the scheme, for the supply of machines under the Hire-purchase Scheme and under the Bank Guarantee Scheme for the development of small-scale industries. No Statewise and industrywise allocation has been made out of the credit of 10 million dollars.

SRI A. VEDARATHNAM : அமெரிக்கா உதவியிலிருந்து நம்முடைய மாநிலத்திற்கு ஏதாவது உதவி கிடைத்திருக்கிறதா ? அப்படியானால், அந்த உதவியை எந்த எந்தத் தொழிலில் ஈடுபடுத்த அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : இதில் அனுஷ்டிக்கின்ற முறை என்னவென்றால், என்ன என்ன சிறு தொழில்களுக்கு நமக்கு வெளிநாட்டிலிருந்து இயந்திரங்கள் வேண்டுமென்று முதலில் கணக்குப் போட்டு, அந்த இயந்திரங்களை வாங்குவதற்கு நாம் அந்தக் கார்ப்பரேஷனிடத்திலே அனுமதி வாங்கவேண்டும். அந்த விதமாக நாம் இதுவரையிலும் நாஷனல் இண்டஸ்ட்ரீஸ் கார்ப்பரேஷனிலிருந்து 1959–60-வது வருஷத்திற்கு மாத்திரம் 10,04,563 ரூபாய் அளவுக்குச் சிறு இயந்திரங்களை வாங்கியிருக்கிறோம். இந்த வருஷத்திற்குத் திட்டங்கள் தயாராகிக் கொண்டிருக்கின்றன.

*Tele-communication Engineering*

* 425 Q.—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) whether the degree course in Tele-communication Engineering in the College of Engineering, Guindy, has been abolished from the year 1960–61;

(b) if so, the reasons therefor and the steps taken to re-employ the staff thrown out of employment;

(c) if not, the number of students taking up this course for the past three years and the number and status of staff employed in this department; and

(d) whether there was a proposal to introduce Tele-communication as a subject for post-graduate study; and if so, the details of the proposal and the reason for not giving effect to it till now?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) No, Sir. The Tele-communication Course has been ordered to be suspended, temporarily, during 1960–61.

(b) Sufficient number of students has not opted for this course. It is proposed to retain the existing surplus staff for the present and to utilize their services in the other branches where there may be vacancies.

(c) Does not arise.

(d) No, Sir.

*Letters from M.L.As.*

* 426 *Q.*—Sri S. M. ANNAMALAI : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா —

(அ) சர்க்காருக்கு எம்.எல்.ஏ.-க்கள் அனுப்புகிற கடிதங்களுக்கு பதில் வருவதில்லை என்று சா. மொ. அண்ணாமலை எம்.எல்.ஏ.-யின் கடித எண் S. M. A./15 Vol. III/59 1960-ம் ஆண்டு மே மாதம் 9உ-ல் சர்க்காருக்கு கிடைத்ததா ?

(ஆ) அப்படியானால், அதன்மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன ?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) Instructions have been issued to all Heads of Departments that letters from Members of the Legislature should be acknowledged immediately, final replies being sent in due course.

The requests contained in the letter, dated the 9th May 1960 are being examined by the Departments of the Secretariat concerned. In a few cases, replies have already been sent to the member by the departments concerned.

Sri S. M. ANNAMALAI : இந்தக் கடிதம் வந்த பிறகுதான் இப்பொழுது ஒவ்வொரு கடிதத்திற்கும் பதில் வருகிறது. இன்னும் பல கடிதங்களுக்குப் பதிலே வரவில்லை. இரண்டு, மூன்று ஆண்டுக் காலமாக பலவித " ரிமைண்டர்கள " அனுப்பியும்கூட இவ்வளவு காலதாமதம் செய்வதற்குக் காரணம் என்ன என்று சர்க்கார் கண்டு பிடித்தார்களா ? கண்டுபிடித்து, அப்படிச் செய்த உத்தியோகஸ்தர்கள் மீது என்ன நடவடிக்கை எடுத்தார்கள் ?

The Hon. Sri C. SUBRAMANIAM : அந்தக் கடிதத்தில் என்ன தகவல் கேட்கப்பட்டிருந்தது என்பதைப் பொறுத்திருக்கிறது. உடனடியாகத் தகவல் கொடுக்கக்கூடியதாக இருந்தால் கொடுத்திருக்க முடியும். அந்தக் கடிதத்தைப் பார்க்காமல் நான் இந்தக் குற்றச்சாட்டை ஏற்றுக் கொள்ள முடியாத நிலைமையில் இருக்கிறேன்.

Sri S. M. ANNAMALAI : " சட்ட மன்ற உறுப்பினர்கள் இனிமேல் எழுதும் கடிதங்களுக்கு நேரடியாகப் பதில் தரக்கூடாது " என்று சர்க்கார் இப்பொழுது தற்காலிகமாக உத்தரவு பிறப்பித்துள்ளார்களா ? அப்படியானால் அதற்குக் காரணம் என்ன ?

The Hon. Sri C. SUBRAMANIAM : நான் படித்ததை இன்னொரு தடவை படிக்கிறேன்:

" Instructions have been issued to all Heads of Departments that letters from Members of the Legislature should be acknowledged immediately, final replies being sent in due course."

Sri N. R. THIAGARAJAN : இந்த சுற்றறிக்கை ஜில்லாக் காரியாலயங்களுக்கு அனுப்பப்பட்டிருக்கிறதா ? ஜில்லா கலெக்டர் ஆபீஸ் போன்ற ஜில்லா லெவலில் இருக்கக்கூடிய காரியாலயங்களிலிருந்து 100-க்கு 99 கடிதங்களுக்கு பதில் வருவதே இல்லை. ஆகவே, ஜில்லாக் காரியாலயங்களையும் இந்த உத்தரவில் சேர்த்துக்கொள்ளுவார்களா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : இதிலே இப்பொழுது இருக்கிறது இலாகா தலைவர்களைப் பற்றிதான். கலெக்டர்களுக்கு இந்த உத்தரவு அனுப்பப்பட்டிருக்கிறதா என்பது எனக்குத் தெரியவில்லை.

Sri A. GOVINDASAMY : கனம் அண்ணாமலை அவர்கள் எழுதிய கடிதங்களைப் பார்த்துத் தான் சொல்ல வேண்டுமென்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஸ்ரீ அண்ணாமலை அவர்கள், ஏற்கனவே என்னென்ன

5th September 1960]

கடிதங்கள் எழுதப்பட்டிருக்கின்றன, பதில் வராத கடிதங்கள் எவை என்பதை அச்சிட்டு இந்த மன்றத்தில் வழங்கினார்களே ? கனம் அமைச்சர் அவர்கள் அதைப் படித்தார்களா ? இல்லையென்றால் அதைப் படித்துப்பார்த்து தகுந்த நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அம்மாதிரி அச்சிட்டுக் கொடுத்ததை நான் பார்க்கவில்லை. ஆதலால் மற்ற கேள்விகள் எழவில்லை.

*Lignite at Wallajah taluk*

*427 *Q.*—SRI N. MARUDACHALAM (on behalf of SRI V. K. KOTHANDARAMAN) : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வட ஆற்காடு ஜில்லா, வாலாஜா தாலூகாவில் கண்டெடுக்கப் பட்ட நிலக்கரி மேற்படி ஜில்லா கலெக்டர் அவர்களால் சர்க்காரின் பரிசீலனைக்கு அனுப்பப்பட்டுள்ளதா ?

(ஆ) பரிசீலனை செய்யப்பட்டதா ?

(இ) அதன் விவரமென்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*), (*b*) & (*c*) The information is being collected and will be placed in the library of the House.

*Common tool room shops*

*428 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) சமுதாய அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் கிராமப் பொது வசதிப் பட்டறைகள் ஏற்படுத்துவது பற்றி அரசாங்கத்தால் பரிசீலனை நடத்தப்பட்டு வருகிறதா ?

(ஆ) அப்படியாயின் இத்திட்டம் எப்போதிருந்து அமுலுக்கு கொண்டு வரப்படும் ?

(இ) எந்தெந்த இடங்களிலே இப்பட்டறைகள் ஏற்படுத்தப்படும். ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) & (*c*) It is proposed to establish two Service-*cum*-Common Facility Workshops during 1960–61, one at Kurumbapatti in the Nilakottai Block, Madurai district and the other at Bhavani in the Bhavani Block, Coimbatore district.

SRI P. G. MANICKAM : தேசிய விஸ்தரிப்புத் திட்டப் பகுதிகளில் இவ்வாறு பொதுப் பட்டறைகள் ஏற்படுத்தப்படுமா ? கூடுமானவரையிலும் ஒவ்வொரு திட்டப் பகுதியிலும் ஒரு பொதுப் பட்டறையை ஏற்படுத்துவதற்கு சர்க்கார் முயற்சி செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மூன்றாவது ஐந் தாண்டுத் திட்டத்தில் இம்மாதிரி அதிகமாக தொழில் பட்டறைகள் பல இடங்களில் ஏற்படுத்துவதாக உத்தேசம்.